# சிக்கிக்கொண்ட சிட்டுக்குருவி

கதை ஜாய் கௌலி. ஓவியம் கேவின் பிஷப்

தமிழாக்கம் தேக்கம்பட்டு ராம்ஸ்



ஜார்ஜும் ஹாரியும் வீடியோ கடைக்கு போனபோது அது பூட்டியிருந்தது. ஜன்னல் வழியே பார்த்த போது உள்ளே ஒரு சிட்டுக்குருவி மாட்டிக்கொண்டிருப்பதை பார்த்தார்கள். கடை முதலாளியோ இரண்டு வார விடுமுறையில் வெளியூர் சென்றுவிட்டார். ஏதாவது செய்தாக வேண்டும் இல்லையென்றால் சிட்டுக்குருவி இறந்துவிடும்.

ஊரிலிருந்த பெரியவர்களின் உதவியை நாடினார்கள். அவர்கள் ஒரு சிறிய சிட்டுக்குருவிக்காக பெரிய ஆர்வம் காட்டவில்லை. ஒரு ஆள் சொன்னார் "குருவிக்கா பஞ்சம் இங்கே? ஆயிரக்கணக்கில் இருக்கிறதே.“

ஜார்ஜுக்கும் ஹாரிக்கும் அப்படி விட்டுவிட மனமில்லை. நகரத்தலைவரிடம் சென்று முறையிடுகிறார்கள். எப்படி சிட்டுக்குருவியை காப்பாற்றுகிறார்கள் என்பது தான் இந்த கதை

# சிக்கிக்கொண்ட சிட்டுக்குருவி

## கதை ஜாய் கௌலி



புத்தாண்டு தினத்தன்று
ஜார்ஜும் ஹாரியும்
வாடகைக்கு எடுத்திருந்த
வீடியோ டேப்பை திருப்பிக்
கொடுக்க கடைக்குப்
போனார்கள்.






கடை பூட்டியிருந்தது.
கடைவாசலில் 'ஜனவரி 13 வரை விடுமுறை' என்று நோட்டீஸ் ஒட்டப்பட்டிந்தது. அதன் கீழே கதவின் உட்புறம் ஒரு பை தொங்கவிடப் பட்டிருந்தது. ஜார்ஜ் அந்தப் பைக்குள் தான் கொண்டு வந்திருந்த வீடியோ டேப்பை போட்டான்.





கண்ணாடியில் முகத்தை அழுத்தி உள்ளே பார்த்துக்கொண்டிருந்த ஹாரி "டேய் ஜார்ஜ், கடைக்குள்ள ஒரு சிட்டுக்குருவி பறந்திட்டிருக்குடா" என்றான்.



கடையின் எதிர்ப்புறம் இருந்த உணவகம் திறந்திருந்தது. அங்கு வேலை செய்து கொண்டிருந்த பெண்மணி "என்ன வேண்டும் பசங்களா?" என்றார்.

"அந்த கடையில ஒரு சிட்டுக்குருவி மாட்டிக்கிட்டிருக்கு" என்றான் ஜார்ஜ்.

"அந்த கடை ,இன்னும் இரண்டு வாரத்திற்கு திறக்காது" என்றான் ஹாரி. “கடைக்காரர் வீடு எங்க இருக்குன்னு உங்களுக்கு தெரியுமா? அவரை கூட்டிவந்து கதவை திறக்கச் சொல்லலாம்” என்று ஜார்ஜ் சொன்னான்.

தெரியாது என்று தலையாட்டிய பெண்மணி “அவர் விடுமுறையில் போய்விட்டார். இது ஒரு பெரிய விஷயமே இல்ல. குருவிக்கா பஞ்சம் நாட்டிலே?” என்றார்.



ஜார்ஜும் ஹாரியும் அடைபட்டிருக்கும் சிட்டுக்குருவி பற்றி தங்கள் அம்மா அப்பாவிடம் சொல்ல வீட்டிற்கு விரைந்தார்கள்.



அப்பாவிற்கு அந்த
கடைக்காரரை தெரியும்போல.

தொலைபேசியில்
அழைத்துப்பார்த்தார்.
கடைக்காரர் பதில்
அளிக்கவில்லை. “வெளியூர்
போய்விட்டார் போல”
என்றார் தந்தை.

“நாம் அதை காப்பாற்ற
வேண்டும்” என்றான் ஜார்ஜ்.

“பேசாமல் போய்
விளையாடுங்க. சிட்டுக்குருவி
ஒன்றும் அபூர்வமான பறவை
இல்லை” என்றார் அப்பா.



சிறுவர்கள் திரும்பவும் வீடியோ கடைக்கு போனார்கள். சிட்டுக்குருவி கதவின் கண்ணாடி மேல் வந்து வந்து முட்டிக் கொண்டிருந்தது.

குருவி பறப்பதை நிறுத்தி ஜார்ஜையும் ஹாரியையும் பார்த்தது. “என்னை காப்பாத்துங்கன்னு சொல்லுதுடா” என்றான் ஹாரி.



ஜார்ஜ் தன் சகோதரனிடம் கேட்டான் “யார் கதவை உடைத்து உள்ளே மாட்டியிருப்பவர்களை காப்பாற்றுவார்கள்?”

“எனக்கு தெரியும்” என்று குதித்தான் ஹாரி

ஜார்ஜும் ஹாரியும்
காவல்நிலையத்திற்கு ஓடினார்கள்

அவசரம்! அவசரம்! வீடியோ கடைக்குள்ள ஒரு உயிர் மாட்டிக்கிட்டிருக்கு. . .என்று கத்தினான் ஜார்ஜ்.

காவலர் வேகமாக எழுந்து “என்ன வீடியோ கடையில யாருக்காவது ஆபத்தா?” என்று கேட்டார். ---

சிறுவர்கள் தலையாட்டினார்கள். “பறந்து வந்து ஜன்னலில் முட்டிக்கிட்டிருக்கு. ஜனவரி 13ம் தேதி வரை கடையை திறக்கமாட்டார்கள்.” என்று பதறினான் ஹாரி.

கடைக்குள்ள மாட்டியிருக்கிறது ஒரு பறவையா? என்று கேட்டார் காவலர். ஆமாம் ஒரு சிட்டுக்குருவி. வாங்க கதவை உடைத்து காப்பாற்றுங்க என்றான் ஜார்ஜ்.
காவலர் கடுப்பாகி விட்டார். நானே புத்தாண்டு தின இரவிலே தூங்காமல் வேலை செய்து களைத்துப் போயிருக்கிறேன். ஓடிப்போயிருங்க. இல்லன்னா என்று மிரட்டினார் காவலர். “சிட்டுக்குருவி பாவம்” என்றான் ஜார்ஜ். “அதை பறவைகளின் சொர்கத்தில போய் கத்தச் சொல்லு” என்றார் காவலர்.





அடுத்தநாள், அம்மா மரணம் என்பது பற்றி பேசினார். “எல்லோரும் ஒருநாள் சாகத்தான் வேண்டும். தாத்தா இறந்தார் பூனை இறந்தது. அதனால கவலைப் படாதீர்கள். கோடிக்கணக்கான சிட்டுக்குருவிகள் உலகத்தில இருக்கு” என்றார் அம்மா.

“ஆனா இந்தச் சிட்டுக்குருவி இன்னும் உயிரோட இருக்கு. நாங்க காப்பாத்துவோம்னு காத்துக்கிட்டிருக்கு” என்றான் ஹாரி.

“நம்ம தோட்டத்துக்கு போய் அங்கு வருகிற சிட்டுக்குருவிகளுக்கு இரை போடுங்க” என்றார் அப்பா.

“அதனால் என்ன பயன்?” கேட்டான் ஜார்ஜ்.

“எறும்பு மாதிரி கோடிக்கணக்கில் சிட்டுக்குருவிகளும் இருக்குன்னு உங்களுக்கு புரியும்” என்று சிரித்தார் அப்பா.

வீடியோ கடையில் சிட்டுக்குருவியால் தொடர்ந்து பறக்க முடியவில்லை. சோர்ந்து போய் மேஜையில் உட்கார்ந்து சிறுவர்களை பரிதாபமாக பார்த்தது. இன்னும் ஒரு நாள் இப்படி இருந்தால் இறந்துவிடுமே என்ன செய்வது என்று இரண்டு பேரும் யோசித்தார்கள்.

ஜார்ஜிட்கு அப்படி நினைக்கவே பிடிக்கவில்லை.

“ஏதாவது ஒரு வேலை நடக்க வேண்டுமென்றால் மேலிடத்தை பிடிக்கணும்னு அப்பா சொல்வாரே? நம்ம ஊரில் யார் மேலிடம்?” என்றான்.

நகரத் தலைவர் நாகமணி! என்றான் ஹாரி.



நாகமணி வீட்டின் கதவை திறந்த ஊழியர் சொன்னார் “நகரத் தலைவர் பத்திரிக்கையாளர் கூட்டத்தில் இருக்கிறார் இப்போது சந்திக்கமுடியாது.”

“பரவாயில்லை. கூட்டம் முடியும்வரை காத்திருக்கிறோம்” என்று சொல்லி வீட்டு வாசல்படியில் உட்கார்ந்தனர்



நகரத் தலைவர் நாகமணி அவர்களை பார்த்துவிட்டார் போல.

வெளியே வந்து என்ன விஷயமென்று கேட்டார். சிட்டுக்குருவி பற்றி சொன்னான் ஜார்ஜ்.

நாகமணி பத்திரிக்கையாளர்களைப் பார்த்து புன்னகைத்தார். “சாலை வரி, சாக்கடை பிரச்சினை இதையெல்லாம் கொஞ்சம் மறந்து விட்டு என்னோடு வாருங்கள் ஒரு நல்ல செய்தி தருகிறேன்” என்றார்.





நாகமணிக்கு தான் அந்த ஊரில் எல்லோரையும் தெரியுமே! பூட்டுவேலை தெரிந்த ஒருவரை வைத்து வீடியோ கடையை திறந்தார்கள்.

ஜார்ஜும் ஹாரியும் உள்ளே ஓடினார்கள்.

சிட்டுக்குருவி தரையில் சுருண்டு கிடந்தது. நல்லவேளை உயிருடன் இருந்தது.

ஜார்ஜ் அதை மெதுவாக கையில் எடுத்தான். அதன் இதயம் துடிப்பது அவன் விரல்களில் அதிர்ந்தது. உடனே வெளியே கொண்டுவிட நினைத்தார்கள் சிறுவர்கள். ஆனால் நாகமணி முதலில் ஒரு புகைப்படம் எடுக்க விரும்பினார். அவர் பத்திரிக்கையாளர்களிடம் "அனைத்து உயிர்களின் நலமும் நகரத் தலைவருக்கு முக்கியம்" என்றார்.

பிறகு ஜார்ஜ் தன் கைகளை மெல்ல திறந்தான். சிட்டுக்குருவி அசையவே இல்லை. அதன் இதயத் துடிப்பு கடிகார ஒலி போல் மெல்லியதாய் இருந்தது.
ஜார்ஜ் அதன் மேல் மென்மையாக ஊதினான்.
குருவி சிறகுகளை சிலிர்த்துக் கொண்டு கண்களை திறந்தது. அவனை நன்றியோடு உற்றுப் பார்த்தது. சிறகுகளை விரித்து வானத்தில் பறந்தது.

விழுந்துவிடுமோ என்று சிறுவர்கள் பயந்தனர். ஆனால் அது வேலிச்சுவரை சுலபமாக கடந்து, பறந்து மறைந்தது.






“அடுத்து என்ன செய்யப் போகிறீர்கள் என்று தான் எனக்கு கவலை” என்றார் அம்மா.

செய்தித்தாளில் வந்திருந்த சிட்டுக்குருவியுடனும் சிறுவர்களுடனும் நின்றிருக்கும் நாகமணியின் புகைப்படத்தை காட்டினார் அப்பா. .

“அவர் நல்ல இதயம் படைத்தவர்.” என்றான் ஜார்ஜ்.

“புத்திசாலியும் கூட” என்றார் அப்பா. புகைப்படத்தின் மேலே

**"சிறுவர்களின் சிட்டுக்குருவியின்**

**சாம்பியன்!“**என்று

தலைப்பிட்டிருந்தது!



அன்று மாலை பறவைகளுக்கு தோட்டத்தில் இரை போட்டுக் கொண்டிருந்தார்கள் ஜார்ஜும் ஹாரியும்.
தாங்கள் காப்பாற்றிய சிட்டுக்குருவியும் அங்கு இருப்பதாக நினைத்தனர்.
எல்லாக் குருவிகளுமே அவர்களை நன்றியோடு பார்க்கும்போது எப்படி கண்டுபிடிப்பது?

முற்றும்